6th September 1960]

SRI P. S. CHINNADURAI : இந்த சுற்றுப் பிரயாணத்தின் போது பல கிராமங்களுக்கு விஜயம் செய்வதற்கான வாய்ப்பு முதல் அமைச்சர் அவர்களுக்கு ஏற்பட்டது. அதனால் அநேகமாக நன்மையே ஏற்பட்டிருக்கும் என்று கருதுகிறேன். இதைப் போல கோவை ஜில்லாவில் பல்லடம் தாலுகா பகுதியிலே முதல் அமைச்சர் அவர்களும், விவசாயத் துறை அமைச்சர் அவர்களும் சுற்றுப்பிரயாணம் செய்ய முன்வருவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர் அவர்களே இதுமாதிரி மந்திரிகளை சுற்றுப்பிரயாணம் செய்ய வேண்டும் என்று அழைத்ததை நான் வரவேற்கிறேன். அவர்கள் அந்த அழைப்பை ஏற்றுக்கொள்ளுவார்கள் என்று நான் நம்பு கிறேன்.

*Schools for the blind*

* 485-B Q.—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப் பாரா—

(அ) 1960-ல் சென்னை ராஜ்யத்தில் (1) அரசாங்கத்தாரால, (2) தனிப்பட்டவர்களால் நடத்தப்படும் குருடர்களுக்கான பள்ளிக்கூடங்கள் எத்தனை ?

(ஆ) இப்பள்ளிக்கூடங்களிலே எத்தனை மாணவர்களும், மாணவிகளும் படிக்கிறார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Government Schools 2 and Private Schools 3.

(b) 314 boys and 157 girls as on 31st March 1959.

SRI P. G. MANICKAM : இவர்களுக்கு தொழில் பயிற்சிகூட அளிக்கப்படுகிறதா? அவ்வாறு தொழில் பயிற்சி அளிக்கப்பட்டால் எந்தவிதமான தொழில் பயிற்சி அளிக்கப்படுகிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆம், இவர்களுக்கு தொழில் பயிற்சியும் அளிக்கப்பட்டு வருகிறது. இதுமாதிரி கண் இல்லாதவர்கள் செய்யக்கூடிய பல தொழில்கள் இருக்கின்றன. 'டைப்ரைடிங், கார்பெண்டரி வொர்க், பாஸ்கெட் விவிங்,' இது மாதிரி பல தொழில்கள் சொல்லிக் கொடுக்கப்படுகின்றன.

*Pay Commission*

* 485-C Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to make the rules issued on the recommendations of the Pay Commission applicable to persons who have retired and have been re-employed and are actually on duty on the date of the issue of these rules?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

SRI N. K. PALANISAMI : Sir, since the re-employed persons continue to do the same work, will the Government be pleased to make these rules applicable to them?